உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவம்


| மலர் | துந்துபி௵ மார்கழி௴ | இதழ் |
| --- | --- | --- |
| 8 | 1922௵ டிசம்பர்௴ | 9 |


### திருநேரிசை

வெள்ளநீர்ச் சடையர்போலும் விரும்புவார்க் கெளியர்போலும்
உள்ளுளே யுருகிநின் றங் குகப்பவர்க் கன்பர்போலும்
கள்ளமே வினைகளெல்லாங் கரிசறுத் திடுவர்போலும்
அள்ளலார் பழனைமேய வாலங்காட் டடிகளாரே.

---

## சைவப் பேரரசு

சுத்தாத்வைத சித்தாந்த சைவ சிகாமணிகளாகிய நம் முன்னோர்கள் தங்கள் சந்ததியார்களாகிய நாம் பிறவிப் பெருந்துன்பத்தினின்றும் நீங்கிப் பேரானந்தப் பெரு வாழ்வு வாழ்ந்திருக்க வேண்டி, சைவ இராசாங்கத்தினை, எக்காலத்தும் எவராலும் அழிக்கமாட்டாதபடி பல வகைப்பட்ட வரண்களோடும் நிலைநிறுத்தி வைத்தார்கள். இவ்விராசாங்கத்தின் பெருமை அளப்பரியது. அதில் ஒரு சிறிதெடுத்து எம் சிற்றறிவுக்கெட்டிய வரையில் சுருக்கி விளக்குவாம்.

சைவ இராஜாங்கத்தின் எல்லை பிருதிவி தத்துவ முதல் நாத தத்துவ மீறாக வியாபித்திருப்பது. எண்ணிறந்த அண்டங்கள் இவ்வரசாங்கத்தின் ஆளுகைக்குட்பட்ட தேசங்களாம். விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் எனப்படும் மூவகைச் சாதியாரும் இவ்வரசாங்கத்தின் மூவகையான விரிந்த பெருங் குடிமக்களாவர். விஞ்ஞானகலருள் அனு சதாசிவர் அட்டவித்தேசுரர் சத்த கோடி மஹா மந்திரேசுரர் என்னும் மூவகைப் பிரிவுகளுண்டு. பிரளயாகலராவார் மண்டலர் குரோதனர் வீரர் ஸ்ரீகண்டர் உருத்திரர் என ஐந்து பிரிவினராயிருப்பர்.

சகலராவர் சுரர், நரர், மிருகம், பக்ஷி, ஊர்வன, தாவரம், நீர்வாழ்வன எனப்படும் எழுவகையா யிருப்பர். பிரளயாகலர் சகலரினும் பன் மடங்கு உயர்ந்த குடிமக்கள் - விஞ்ஞானகலர் பிரளயாகலரினும் பன் மடங்கு உயர்ந்த குடிமக்கள். திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் சகலருள் உயர்ந்த குடிமக்களும், சைவ இராஜாங்கத்திற்குட் பட்டு வைகுண்டம் சத்தியலோகம் சொர்க்கலோகம் முதலிய தேசங் களையாளும் மன்னருமாவர்.

சைவ இராசாங்கத்தின் இராசதானியானது முறையே ஆகமம் வேதம் புராணம் என்னும் மூவகை மதில்களாலும், சுத்தாத்வைத சித் தாந்த ஞானம் என்னும் அகழியாலும், ஆலயங்களாகிய கோட்டை களாலும், மடங்களாகிய பாசறைகளாலும் நம் முன்னோரால் அரண் செய்யப்பட்டுள்ளது. புராணமாகிய மதிலைக் கடந்தே வேதமாகிய மதில்சூழ்ந்த ஆவரணத்தையடைதல் வேண்டும். வேதமாகிய மதிலைக் கடந்தே ஆகமமாகிய மதில்சூழ்ந்த ஆவரணத்தை யடைதல்வேண்டும்.

ஆகமமாகிய மதில்சூழ்ந்த ஆவரணத்தில் முறையே தாசமார்க் கம், புத்திரமார்க்கம், சகமார்க்கம் சன்மார்க்கம் எனப்படும் நான்கு இராஜ வீதிகளுண்டு. இவற்றுள் சன்மார்க்கம் எனப்படும் இராஜ வீதியில் மந்திர வடிவினதாகிய இராசமாளிகையுளது. அதில் திரு வைந்தெழுத்தெனப்படும் சிங்காதனத்தில் சர்வலோகைக சக்கிரவர்த்தி யாகிய சிவபெருமான் தமது அருட்சத்தியாகிய 'இராஜராஜேஸ்வரி யோடு வீற்றிருந்தருளுவர்.

சிவராஜ சக்கிரவர்த்தியின் பெருமை "மறையினால் அயனால் மாலால் மற்றுங்—குறைவிலா அளவினாலுங் கூறொணாதாகி நின்றது." இவரைச் சிங்காதனத்தில் ஏற்றினவருமில்லை, அதனினின்றும் இறக் கினவருமில்லை. இவர் தமக்குத் தாயுந் தந்தையு மில்லாராய் "தாயுந் தந்தை பல்லுயிர்க்குந் தாமேயாய தலைவனர்." இவருக்குக் கருணையே உருவமாம். ஞானமே ரூபமாம். ஆனந்தமே சரீரமாம். இவர் ஆணோ பெண்ணோ அலிபோவென்று நிச்சயிக்கப்படாதவர். ஆயினும், தாமே தாயும் தந்தையுமா யிருந்து இடைவிடாமல் அளவிறந்த மக்களைப் பெற்றுக் காப்பவர்.

இச்சிவராஜ சக்கிரவர்த்தியானவர் தம் பொருட்டுச் செய்வது யாதொன்றுமின்றி உயிர்களாகிய தமது பிரஜைகளின் பொருட்டே எதையும் செய்வர். தமது ஆணை கடவா தொழுகும் பிரஜைகளிடத் தில் இவர் காட்டுங் கருணைக்கு அளவே கிடையாது. அவர்கள் பொருட் டுத் தம் பெருமை தாமறியாத் தன்மையராய் எவ்வகைத் தொழிலுஞ்



செய்வர். அவர்கள் பொருட்டு மண் சுமப்பர், விறகு சுமப்பர், அடி படுவர், திட்டுகேட்பர், இரப்பர், சண்டையிடுவர், வழக்கிடுவர், பாலராவர், குமாராவர், விருத்தராவர், மிருகமாவர், மாதர்பால் தூதுசெல்வதும் செய்வர். அவர்களுக்கு வைகுண்டம் சத்தியலோகம் சொர்க்கலோகம் முதலிய உலகங்களைப் பரிசாகவும் அளிப்பர். தமது ஆணையை மீறி நடப்பவர் யாவரேயாயினும் சிறிதும் தாட்சிணியமின்றி அவர்களை இயமன் என்னும் சிறைக்காவலனிடமனுப்பி பலவிதமான நரகங்களா கிய சிறைகளில் இடுவித்துப் படாதபாடு படுத்திவிடுவர்.

தம்மைப் பகைத்தவர்களைத் தண்டித்தற்கு இவருக்கு யாதொரு ஆயுதமும் வேண்டுவதில்லை. கண்ணாலும், காலாலும், கால்விரலாலும், நகத்தாலும், நகையாலுமே எவ்வகைப் பட்டவர்களையும் தண்டித்து விடுவர். இவர்மீது பகைவர் விடும் சேனைகளும் ஆயுதங்களுமே இவரிடமிருக்கும் சேனைகளும் ஆயுதங்களும். உலகையழிக்க வரும் எவ் வகைப் பெருவெள்ளமும் இவர் தலைமயிரொன்றின் நுனியில் ஒரு பனித்துளிபோல் அடங்கி யொட்டிக்கொள்ளும். இவர் கண்ணினின் றும் தோன்றும் ஒரு சிறு தீப்பொரியால் சர்வலோகங்களும் கண நேரத்தில் எரிந்து சாம்பராகிவிடும்.

இவர் தம் பிரஜைகளிடத்தில் வைத்திருக்கும் அருளுக்கு அள வின்மையால் அவர்கள் அமுதுண்ணத் தாம் நஞ்சுண்பர். அவர்கள் பொன்னாபரணங்களும் இரத்தினாபரணங்களுமணிய, தாம் பாம்பை ஆபரணமாகவணிவர். அவர்கள் இரத்தின கிரீடங்கள் தரிக்க, தாம் சடைமுடி தரிப்பர். அவர்கள் பசியாது வாழ, தாம் தலையோட்டில் இரப்பர். இவர் இரக்கச் சென்றால் மாதர்கள் இவருக்கிடும் பிச்சை ஓட்டில் விழாமல் தரையில் சிந்திவிடும். அதில் எத்தனைபேர் கூடி எவ்வளவு பிச்சையிட்டாலும் பாதிதானும் நிரம்புவதில்லை. தம் பிரஜை கள் பட்டாடைகளும் பொன்னாடைகளும் முத்தாடைகளும் தரிக்க, தாம் தோலாடையும் திக்காடையும் தரிப்பர். அத்தோலாடையும் பகைவர் கொடுத்தது. திக்காடையோவெனில், அதுவும் எட்டு கோணலாயிருக் கும். அதின் அகலமும் நீளமும் அளக்க முடியாது. அன்றியும் அது வேளைக்கொரு நிறமாயிருக்கும். பகலில் வெண்மையாயிருக்கும். இர வில் கறுப்பா யிருக்கும். மாலையில் சிவப்பாயிருக்கும். தம் பிரஜைகள் மனைவி மக்களோடும் மற்றுமுள்ள இனத்தவரோடும் கூடி மேடமாளி கையாதிகளில் வசித்திருக்க, தாம் எல்லாமிறந்த மயானத்தில் வசிப்பர். தம் பிரஜைகள் புனுகு ஜவ்வாது களப கஸ்தூரிகளையணிய, தாம் சுடு காட்டுச் சாம்பலைப் பூசிக்கொள்வர். இவர் ஒருவரே குறைந்த மதி

யணிந்த நிறைந்த மதியுடையவர். இவர் ஒருவரே இன்பமுந் துன்பமுங் கடந்த இன்பக் கடல். இவர் ஒருவரே அருவமும் உருவமுங் கடந்த அருளுருவினர்; ஒரு நாமமும் ஒருருவமுமில்லாமலே ஆயிரந் திருநாமமுந் திருவுருவங்களும் படைத்தவர்; இவர் ஒருவரே குண ரகிதராகிய எண்குணத்தர். இவருக்கு ஒருத்தியே * மனைவியும் தாயும் தந்தையும் மகளும். இவருடைய பிரபாவம் இவைபோல்வன பலகோடியுண்டு. அவைகளைச் சிற்றறிவும் சிற வயதும், சிற வன்மையுமுடைய தமது பிரஜைகள் உணருமாறு இவரே வேதமென்னும் விரிந்த நூலொன்றியற்றி அதற்கு ஆகமமென்னும் மாபாடிய உரையும் செய்து வைத்தனர். இவைகளைத் தம் பிரஜைகள் அறியச் சக்தி குறைந்திருந்தபோது சமய குரவர்களும் சந்தான குரவர்களுமாய தமது பிரதிநிதிகளைக்கொண்டு இவற்றை வடித்தெடுத்த சாரமாக தேவாரத் திருமுறைகளையும் சிவஞானபோத முதலிய சித்தாந்த ஞானசாத்திரங்களையும் உபதேசஞ் செய்வித்தருளினர்.

நம்முன்னோர்கள் நம் இறைவரளித்த அரும்பெரும் ஞான பொக்கிஷங்களாகிய வேதாகமங்களையும் தெய்வத்தமிழ் மறைகளையும் ஞான சாஸ்திரங்களையும் சர்வ சாக்கிரதையாகப் பாதுகாத்து நமக்குப் பிதுரார்ஜிதமாக வைத்துச் சென்றதுமன்றி, நம் இறைவனர் பிரபாவங்களை ஆலயங்களாகிய சிலாசாஸனங்களாலும் உற்சவங்களாகிய படங்களாலும் மிகவும் நன்குய் விளக்கி வைத்தார்கள் எங்ஙனமெனில்:- -

நம் இறைவர் தமக்கென ஒருருவமும் இலராயினும் அருள் முற்றுத்த அருவமும் உருவமும் அருவுருவமுமாகிய மூன்று திருமேனிகளையுங் கொண்டவர் என்பதைக் "காணுத அருவினுக்கு முருவினுக்குங் காரணமாய் நீணுக மணிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்கம்" ஆகிய அருவுருவத் திருமேனி கொண்டு விளக்கினுர்கள்.

நம் தலைவர் பிரம விஷ்ணுக்களுக்கும் எட்டாத திரிமூர்த்திபரர் என்பதனை திருவண்ணுமலையாலும், சர்வாலய தீபதரிசன மகோற்சவத்தாலும் விளக்கினுர்கள்.

எவ்வளவு தவங்களைச் செய்யினும் சிவ வழிபாடில்லாதபோது யாதொரு பயனும் உண்டாகாது என்பதை பிக்ஷாடன மகோற்சவத்தால் விளக்கினுர்கள். (இது "சைவம்" முதல் மலரில் தாருகாவன முனிவர் சரித்திரத்தில் நன்கு விளக்கப்பட்டுள்ளது.)

---

* கனகமார் கவின்செய்மன்றில், அனகநாடர்க்கெம்மன்னே, மனைவி தாய் தந்தை மகள்.





அண்டத்திலும் பிண்டத்திலுமுள்ள தத்துவ சமூகங்களின் நிலைகளை ஆலயக் கட்டடங்களால் விளக்கினுர்கள்.

நம் இறைவர் ஞானிகளுடைய இருதயமாகிய தாமரைமலரில் வீற்றிருப்பவர் என்பதையும், சொரூபம் தடத்தம் என்னும் இரு வேறு நிலைகளை யுடையவர் என்பதையும், சொரூபநிலையில் பரம ஞானகாச மயமாயிருப்பவ ரென்பதையும், தடத்த நிலையில் உயிர்களுக்குத் தாயுந் தந்தையுமா யெழுந்தருளி ஐந்தொழில் செய்பவர் என்பதையும் புண்டரீகபுரம் எனப்படும் சிதம்பரத்தைக் கொண்டு விளக்கினுர்கள். (இவை இதற்கு முன் மலர்களிலும் இவ்விதழிலும் விரித்துரைத்திருத்தல் காண்க).

நம்மிறைவர் அட்டமூர்த்தியா யிருப்பவர் என்பதை பஞ்சபூதத் தலங்களாலும், சூரியபூசை, சந்திரபூசை, அடியவர் வழிபாடு என்னும் இவற்றினுலும் விளக்கினுர்கள்.

நாம் மும்மலமாகிய பாசத்தாற் கட்டுண்டு கிடக்கும் பசுக்களென்பதையும், பசு மலம் நீங்கப்பெறின் சீவத்தன்மை நீங்கிச் சிவத்தன்மையடையலாம் என்பதையும், சீவத்தன்மை நீங்கிச் சிவத்தன்மை யடைதற்கு இறைவனைப்போல் உள்ளும் புறமும் பரிசுத்தமாயிருந்து, பசுவின் சாணத்தைத் தகித்தலால் உண்டாகிய புனிதமாகிய திருநீற்றைத் தரித்துத் தம்மை நீறுபூத்த திருமேனியுடைய நின்மலச் சிவமாகப் பாவித்தல் வேண்டும் என்பதையும் திருநீற்றுத் தாரணத்தால் விளக்கினுர்கள்.

நாம் நம்முடைய சீவகரணங்களெல்லாம் சிவகரணங்களாகத் திரிந்து இறைவன் திருவடி யின்பம் பெறும் பொருட்டு பக்குவா பக்குவங்களுக்கேற்பச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை உபாயங்களைச் செய்து வைத்தார்கள்.

அட்டவீரட்டம் முதலிய தலங்கள் வாயிலாக நம்மிறைவர் துஷ்ட நிக்கிரகமும் சிட்டபரிபாலனமும் செய்தமையை விளக்கினுர்கள்.

இவ்வாறு நம் மூதாதைகள் எண்ணிறந்த உபாயங்களால் சைவ இராசாங்கத்தை நிலைநாட்டிச் சென்றிருக்க, இக்காலத்து நம் சைவ சகோதரப் பிரஜைகள் அதனைப் பாதுகாத்தலிற் சிறிதும் முயற்சியின்றி, தங்கள் தங்கள் மனைவி மக்களையும் பணப் பெட்டியையும் பாதுகாத்தலிலேயே பெரிதும் கவலையுடையவர்களா யிருக்கிறுர்கள். அரியு மயனும் பூசித்த ஆலயங்களாகிய கோட்டைகள் பல நரியும் நாயும் திரியும் இடங்களாயின. வெள்ளை வேட்டி வீரர்களும் சிவப்பு வேட்டிச் சேனைத் தலைவர்களும் பெண்களுக்கு ஏவல் செய்யும் பேடிகளாயினர். அதனுல் சிவஞான வீரர் வசித்த பாசறைகளாயிருந்த மடங்கள் பல மாதர்கள் வசிக்கும் வீடுகளாயின. இவ் விபரீதத்தினையறிந்த கிறிஸ்தவர்களாகிய

குறும்பு மன்னர்கள் இதுதான் சமயமென்று அளவுபடாத சேனைகளைக் கொண்டு சைவ ராசதானியைச் சூழ்ந்து தகர்க்கின்றார்கள். பிரமஞான போதினி சங்கம், ஆரியசமாஜம், பிரமசமாஜம் முதலிய நவீன சிற்றரசாங்கங்கள் பல தோன்றி தாக்குகின்றன. இவற்றால் சைவப் பிரஜைகளாகிய நாங்கள் மிகவும் தாக்குண்டு பெரிதும் இடர்ப்படுகின்றோம். எங்களுள் பலர் தாம் சைவ இராசாங்கப் பிரஜைகள் என்பதையும் வேற்றரசர் பிரஜைகள் என்பதையும் உணராதவரா யிருக்கிறார்கள். இதனை யுணர்ந்தவர்களும் சைவ ராஜாங்க மேன்மையை யறியமாட்டாம லிருக்கிறார்கள். மேன்மைகளை யறிந்தவிடத்தும் சைவ ராஜாங்கச் சின்னங்களை யணியாதவர்களாகவும், சட்டங்களுக்கு அமைந்து நடக்காதவர்களாகவுமா யிருக்கிறார்கள். இவர்களெல்லோரையும் கூட்டித் தலைமைவகித்துச் சைவ ராஜாங்கத்தைப் பாதுகாக்கும் சேனைத்தலைவனாகிய சுத்தவீரன் ஒருவனையாவது காணோம். ஐயையோ, இறைவா, இனி நாங்கள் என் செய்வோம். நீயும் நல்லவர் ஈடேற நன்மையும், தீயவர் அழியத் தீமையும் செய்கிறாய். உன் அரசாங்கத்தில் நல்லவர் ஒருவரேனும் இல்லையா? நெல்லுக் கிறைத்தநீர் புல்லுக்கும் பயன்படுமன்றோ? அவ்வொரு நல்லவர் பொருட்டாயினும் தீயவராகிய எங்களைப் பாதுகாத்தல் உன்கடனன்றோ? அப்படிக் காவாவிடில் குடிகள் செய்யும் பாவம் சிவராஜ சக்கிரவர்த்தியாகிய உன்னையேசாரும். குடியுயரக் கோனுயரும். குடிகளின்றி அரசனில்லை. ஆதலால் எங்களைப் புறக்கணிக்காது பாதுகாத்து நீயும் நின்மனைவியும் நீடூழி வாழ்க.

பத்திரிகாசிரியர்.

---

## சிதம்பர மான்மியம்.

(சைவப்பிரகாச சமாசப் பிரசுரம்)

இப்பூவுலகத்திலே கடவுள் ஆன்மாக்களுக்கு அனுக்கிரகிக்கும் பொருட்டுத் திருவுருக்கொண் டெழுந்தருளி யிராநின்ற ஆலயங்கள் பல இருக்கின்றன. அவ்வாலயங்கள் பலவற்றுள்ளும் சிதம்பராலயமானது எவ்விதத்தாலும் மிக மகிமை பொருந்தியதென்று வேதங்களும், ஆகமங்களும், புராணங்களும், இதிகாசங்களும் மிக எடுத்துப் புகழ்கின்றன. ஆலயங்கள், சரீரப்பிரஸ்தாரம் என்றும், இருதயப்பிரஸ்தாரம் என்றும் இருவகைப்படுமெனச் சிவாகமங்கள் கூறுகின்றன. இவ்விருவகையுள் மற்றைய ஸ்தலங்களிலேயுள்ள ஆலயங்கள், சரீரப்



பிரஸ்தார ஆலயமாம். சிதம்பராலயமோ இருதயப்பிரஸ்தார ஆலயமெனப்படும். மற்றைய ஆலயங்களிலே செய்யும் வழிபாடு சகள உபாசனையைக் குறிக்கும். சிதம்பராலய வழிபாடோ, சகள வழிபாட்டோடு நிஷ்கள வழிபாட்டினையும் விளக்காநிற்கும். இன்னும் இந்த ஆலயமானது பல தத்துவார்த்தங்கள் கொண்டு அமைந்ததாகவும், அதன் வடிவம் ஓர் மகா யோகியின் சரீரம்போலவு மிருக்கின்றது. இவ்வாலயத்துள்ள ஐந்து சபைகளும் ஆன்மாவுக்குள்ள ஐந்து சரீரங்களை யுணர்த்துகின்றன. அதாவது இராசசபை அன்னமயகோசத்தையும், தேவசபை பிராணமயகோசத்தையும், நிருத்தசபை மனோமயகோசத்தையும், கனகசபை விஞ்ஞானமயகோசத்தையும், சிற்சபை ஆனந்தமயகோசத்தையும் உணர்த்தும். சிற்சபையிலே இரகசியஸ்தான முதல் நடராஜமூர்த்தி எழுந்தருளியிருக்குமிடம் வரையிலுள்ள பீடம், பிரணவ பீடமென்று சொல்லப்படும். அதைச்சுற்றியுள்ள நான்கு பொற்கம்பங்கள் நான்கு வேதங்களாம். அவைகளைச் சுற்றியுள்ள இருபத்தெட்டு கம்பங்கள் இருபத்தெட்டு ஆகமங்களாம். இந்த இருபத்தெட்டுக் கம்பங்களுள் அடங்கிய விடமானது சுத்தவித்தை யென்று சொல்லப்படும். (இந்த அமைப்பானது ஆகமங்கள் வேதப்பொருளை விளக்கி அதற்குப் பாஷ்யமாயிருப்பதையும், வேதங்கள் பிரணவப் பொருளையே விரிப்பதையும், பிரணவம் ஸ்ரீமதானந்த நடராஜமூர்த்தியையே பொருளாகக் கொண்டிருப்பதையும் பிரகாசிப்பிக்கும்.) சிற்சபையின் முற்புறத்தே தத்துவ தாத்துவிகங்கள் தொண்ணூற்றாறும் தொண்ணூற்றாறு பலகணிகளாகவும், திருவைந்தெழுத்துக்கள் ஐந்துபடிகளாகவும் இருக்கின்றன. மேலுள்ள விமானத்தின் கைமரங்கள் அறுபத்துநான்கும் அறுபத்துநான்கு கலைஞானங்களாம். அதிலுள்ள செப்போடுகள் இருபத்தீராயிரத்திருநூறும் மனிதரால் தினந்தோறும் விடப்படுகின்ற இருபத்தீராயிரத்திருநூறு சுவாசங்களையும், ஆணிகள் எழுபத்தீராயிரமும் அச்சுவாச சஞ்சார ஆதாரமான எழுபத்தீராயிரம் நாடிகளையும், விமானத்தின்மேலுள்ள ஒன்பது கும்பங்களும் வாமை முதலிய ஒன்பது சத்திகளையுங் குறிக்கின்றன. சிற்சபையின் தெற்கிலுள்ள கனகசபையிலே பதினெண் புராணங்கள் பதினெட்டுக் கம்பங்களாக இருக்கின்றன. இன்னுஞ் சிற்சபையின் இலக்கணங்கள் பல இக்கனகசபையில் பொருந்தி யிருக்கின்றன. இச்சிதம்பராலயத்திலேயுள்ள ஆயிரக்கான் மண்டபம் தலையின் ஓர்புறத்திருக்கும் ஆயிரவிதழுள்ள கமலமெனப்படும் மூளையையும், சிவகங்கை அம்மூளையின் மேல்புறத்துள்ள சந்திரபுஷ்கரணி யெனப்படும் அமுதவாபிகையையும் ஒத்திருக்கின்றன.

இவ்வளவு தத்துவார்த்தங்களோடு அமைந்த ஆலய மத்தியிலே யுள்ள சிற்சபையிலே தத்துவங்களனைத்தையுங் கடந்த நிஷ்களசிவ வடிவாகிய சிதம்பரமிருக்கின்றது. இதனையே உலகத்தோர் இரகசிய மென்பர். மேற்காட்டிய பிரணவ பீடத்திலே சகளத்திருமேனியுடைய ஸ்ரீமதானந்த நடராஜவள்ளல் எழுந்தருளியிருக்கின்றனர். நடராஜ மூர்த்தியின் பின் வாயுதிக்கிலே சகளநிஷ்கள வடிவமாகிய வியக்தாவ்வியக்த லிங்கமிருக்கின்றது. இவற்றுள் இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் எய்தப் பெற்றுக் குருமூர்த்தியின் அநுக்கிரகமும் ஞானோபதேசமும் அடைந்த மெஞ்ஞானிகளாலே வழிபடப்படும் நிஷ்கள சிவ வழிபாட்டையும் நிஷ்கள சிவ வடிவையும் சிதம்பர ரகசியமுணர்த்தும். பரமசிவ சொரூப லக்ஷணமும் இதனால் விளங்கும். சிதம்பர ரகசிய வுண்மையையும் அதன் வழிபாட்டின் உண்மையையும் உணர்த்தியோகமுதல்வராய் விளங்கிய ஸ்ரீ தாயுமான சுவாமிகள் "சைவசமயமேசமயம் சமயாதீதப்பழம் பொருளைக், கைவந்திடவேமன்றுள் வெளி காட்டுமிந்தக் கருத்தைவிட்டுப், பொய் வந்துழலுஞ் சமயநெறி புகுதவேண்டா முத்திதருந், தெய்வசபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் செகத்தீரே." என்று திருவாய் மலர்ந்தருளினர். இவ்வாறு நிஷ்களமாய்ச் சிதாகாச சொரூபியாயிருக்கின்ற பரப்பிரமவஸ்து, ஆன்மாக்களிடத்து வைத்த பெருங்கருணையினாலே பஞ்சகிருத்தியஞ் செய்யும் பொருட்டுச் சகளீகரித்த தடஸ்தவடிவமே ஸ்ரீ மதானந்த நடராஜமூர்த்தியினுடைய திருவடிவமாம். அவர் செய்யுந் திருநடனம் பஞ்சகிருத்தியமேயாம். ஸ்ரீ நடேசமூர்த்தியினுடைய தமருகமேந்திய வலக்கரத்தினாலே சிருட்டியும், அபயகரத்தினாலே திதியும், அக்கினியேந்திய இடக்கரத்தினாலே சங்காரமும், ஊன்றிய திருவடியினாலே திரோபவமும், குஞ்சித பாதத்தினாலே அநுக்கிரகமும், நிலைபெறும். எம்பெருமானது நின்ற திருநிலையை இன்னும் ஒருவாறாக உருவகப்படுத்திக் கூறலாம். அதாவது பரங்கருணைத் தடங்கடலாகிய ஸ்ரீ நடராஜ பெருமான் தமது தமருகவோசையினாலே சர்வான்மகோடிகளுக்கும் தாம் அநுக்கிரக கர்த்தாவாய் வந்திருக்கும் நிலையையுணர்த்தி, பிரபஞ்ச சாகரத்துள் அழுந்தி வருந்தும் ஆன்மாக்கள் பிரபஞ்ச வாழ்வுக்கு அஞ்சி நடுங்கி ஐயனே! தமியேங்களைக் காத்தருளல் வேண்டுமென்று அடைக்கலம்புகுத, தமது அபயகரத்தினாலே, அன்புடையீர்! அஞ்சன்மின்! என்று அபயமளித்து, அவர்களுடைய வினைகளைத் தமது இடக்கரத்திலேந்திய அக்கினியினாலே அழித்து, உங்கள் வினைகளையொழித்தோம். நீங்கள் பரிசுத்தராயினீர்கள் என்று ஓதி; தமது சிற்சத்திவடிவாகிய



இடப்பாதத்தின் அருமையை அவர்கள் அறியாமையால் அவர்கள் எளியதாயறியும்பொருட்டுத் தாமே அதைத் தூக்கிக்காட்டி, மற்றொரு இடக்கரத்தினாலே, "இதோ இந்தக் குஞ்சித பாதத்தை வணங்குங்கள்! இதுவே முத்திதர வல்லது; இக்குஞ்சித பாதத்தையே நீங்கள் அடையவேண்டும்; இதனிடை இரண்டறக்கலத்தலே நீங்களடையும் பரமுத்தியாம்" என்று சுட்டிக்காட்டுதல் போலுமாம். இதுவே சைவசித்தாந்தத்தின் மெய்தருமுத்தி நிலையாம். திருவடியிற் சேர்தலாவது சிவசிற்சத்தியோடு இரண்டறக்கலத்தலாம். சத்தியின் பாகமாகிய இடப்பாகத்தைத் தூக்கிக் காட்டியதும் இக்கருத்துப் பற்றியேயாம்.

இன்னும் நடராஜமூர்த்தியின் திருவடிவம் திருவைந்தெழுத்தாலமைந்ததென்று ஆகமங்களுரைக்கின்றன. நடராஜமூர்த்தியினது திருநடன நிலை கூறப்புகின் இன்னும் மிக விரியும். அவை வேதசிவாகமங்களிலும் பதஞ்சலி பகவான் முதலாய மெஞ்ஞானிகள் அருளிய நூல்களிலும் இனிது பிரகாசிப்பனவாம்.

இவ்வாறு ஆரண ஆகமங்கள் புகழும் பூரண முதல்வராகிய ஸ்ரீமதானந்த நடராஜமூர்த்தியானவர் தாமே எத்தொழிற்கும் முதல்வராமென்பதைத் தமது திருநடன நிலையினாலே ஞானமன்றுளுணர்த்தி நிற்ப, பிர்மா விஷ்ணு, உருத்திரன், மகேஸ்வரன், சதாசிவன் என்னும் பஞ்சமூர்த்திகளும், அவர் சங்கற்பித்தபடி சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்னும் ஐந்தொழில்களுள் முறையே ஒவ்வொருவர் ஒவ்வொரு தொழில் புரியா நிற்பர். இன்னும் மற்றைய தலங்களிலேயுள்ள மூர்த்திகள்யாவும் இராப்பொழுது அர்த்தயாமத்தின்பின் இத்தலத்திலே ஒடுக்கமுறுமென்று புராணங்கள் கூறுகின்றன. மற்றுத் தேவர்களும் முனிவர்களும் சிவஞானிகளும் சிவயோகிகளும் மற்றுள்ள எத்திறத்துச் சிவபக்தர்களும் எம்பெருமானது பரமானந்த நிருத்த தரிசனத்தின் பொருட்டுப் பல்லூழிகாலந் தவஞ்செய்வர். பதஞ்சலி முனிவர், வியாக்கிரபாத முனிவர், இரணியவர்மன், உபமன்னிய முனிவர், மாணிக்கவாசக சுவாமிகள், திருநாளைப்போவார், சேக்கிழார் நாயனார், உமாபதிசிவாசாரியார் பெற்றான்சாம்பான் என்றிவர் போன்ற பல மெய்யடியார்கள் எம்பெருமானது திருநிருத்தத்தைத் தமது ஞானக் கண்ணாற் றரிசித்து அவர் திருவருட் செல்வத்து ளழுந்தாநிற்பர். இன்னும் எல்லையில்லாத புகழுடைய தில்லைவாழந்தணமுனீந்திரர் எம்பெருமானது திருவடித்தொண்டே தமக்குரிய பணியும், அவர் திருவருளே தம் பெருஞ் செல்வமுமாகக் கொண்டு அல்லும் பகலும் அவரடி பிரியாது நின்றேத்துவர். எம்பெருமான் இங்ஙனம் மூவுலகுந்தொழுதேத்த நாவ

லர் துதிக்கும் ஞானமணிமன்றுள் ஆனந்தத் திருநிருத்தம் புரிந்து சர் வான்மகோடிகளையும் அநுக்கிரகியாநிற்பர். சைவ சமயத்தோர்க்கு இத் தலம் ஓர் பெரிய குலதனமாம். எக்காலத்தும் சைவ சமயம் வளர்ந் தோங்கியது இத்தலத்திலேயேயாம். சைவ பரமாசாரியர்களாகிய திரு ஞான சம்பந்தமூர்த்தி நாயனர், திருநாவுக்கரசு நாயனர், சுந்தரமூர்த்தி நாயனர் என்னும் மூவரும் அருளிச்செய்த தமிழ் வேதமாகிய தேவாரங் கள் வெளிப்பட்டதும், ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த திருவாசகம் திருக்கோவையார் என்பன திருச்சிற்றம்பலமுடைய பிரான் திருக்கரத்தாலெழுதப்பட்டு ஞானவரங்கேறியதும், ஸ்ரீ நடேசபிரான், "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுத்து அருள்புரியச் சேக் கிழார் நாயனர், அவரருள்வழி நின்று பாடிய பெரியபுராணம் உண்டா யதும், கொடிக்கவி, உண்மைநெறிவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட் பயன், சங்கற்ப நிராகரணமாகிய சைவசித்தாந்த சாஸ்திரங்கள் தோன் றியதும் இத்தலத்தேயாம். பஞ்சாக்கரப்படியிலுள்ள திருக்களிறு துதிக்கையாலெடுத்து நடேசபிரான் திருவடியில் வைத்த காரணத்தால் திருக்களிற்றுப்படி யாரென்னுப சித்தாந்த சாஸ்திரம் பெருமைபெற்ற தும் இத்தலத்தேயாம். இன்றும் சைவ சமய வளர்ச்சிக்கு இடமா யிருப்பது இத்தலமேயாம்.

"கற்பனைகடந்தசோதிகருணையேவுருவமாகி
யற்புதக்கோலநீடியருமறைச்சிரத்தின்மேலாஞ்
சிற்பரவியோமமாகுந்திருச்சிற்றம்பலத்துணின்று
பொற்புடனடஞ்செய்கின்றபூங்கழல்போற்றிபோற்றி."

திருச்சிற்றம்பலம்.

தூத்துக்குடி சைவப்பிரகாச சமாஜ லதலேகம்.

---

## மகரசங்கிராந்தி

(இந்துசாதனம்)

மகரராசியிற் சூரியன் பிரவேசிக்குங் காலம் மகர சங்கிராந்தி யெனப்படும். (சங்கிராந்தி என்பதற்கு ஒன்றிலிருந்து ஒன்றுக்குச் செல்லுதல் என்பது கருத்து.) உத்தராடத்துப் பின் முக்காலும், திரு வோணமும், அவிட்டத்து முன்னரையும் மகரராசியாகும். அவ்வுத்த ராடத்துப் பின் முக்காலிற் சூரியன் செல்லுங்காலம் மகர சங்கிராந்தி யாகும், தேவர்கட்குப் பகல் ஆரம்பிக்குங் காலம் மகர சங்கிராந்தி



(தைமாசப்பிறப்பு) ஆகும். உத்தரதிசை தேவர்கட்குரியது. ஆதவன் உத்தரதிசையைச் சாருங்காலமாதலால் இது உத்தராயணமெனப்படும். [தேவர்கட்கு உதயகாலமாகிய தைமாசம் விசேட புண்ணிய காலமாக எண்ணத்தகும். இவ்வுத்தராயண காலத்திலேயே தேவப் பிரதிஷ்டை முதலிய புண்ணிய சுபகருமங்கள் செய்யப்படும். தேக வியோகமாதலும் உத்தராயணத்திலாயின் விசேடமென்னுங் கொள்கைபற்றியே வீட்டு மனும் தன்னுயிர் நீங்குவதற்கு அக்காலத்தை எதிர்பார்த்திருந்தனனென மகாபாரதங் கூறும். மகரசங்கிராந்தி தொடக்கம் கசு நாழிகையே புண் ணியகாலம். இப்புண்ணிய காலத்திலேயே தைப்பொங்கல் நிகழ வேண்டியது.

இதன்பின் கூறப்படும் விபரத்தாலே மகர சங்கிராந்தி வரலாறு அறியப்படும்.

"மகர சங்கிரமேசத்தி என்னும் ஓர் சத்தியானவள், தக்ஷிணா யனம் ஆறுமாசமும் மனிதருக்கு மூதேவி ரூபமாகவும், பசுக்களுக்குப் பாயும் வேங்கை ரூபமாகவும், பீடித்துக் கொண்டிருந்தாள் என்றும், அப்பீடையானது பசுபதியாகிய சிவபெருமானுடைய திருவருளால் நிவாரணமாகி, உலகத்திற் சகலருஞ் சௌக்கியமடைந்தமைபால், சூரியன் வடபக்கத்திற் றிரும்பும் நாளாகிய தைமாச முதற்றேதி மகரசங்கிராந்தி யாகிய உத்தராயண பிரதம புண்ணிய காலத்தில் எல்லாருஞ் சூரியன் இந்திரன் முதலிய தேவர்களைப் பூசித்துப் பாற்பொங்கல் நிவேதனஞ் செய்து, பிதிர் தேவதைகட்குத் திலதர்ப்பணம் புரிந்து வேதியருக்குப் போதியமட்டுங் கோதானமுதற் றசதானமுங் கொடுக்கவேண்டியது என்றும், ஆடிமாதமாதியாய் மார்கழி மாதாந்தம் வரையும் நாடும், வீடும் முற்றும் மூதேவியடைந்திருந்தபடியால், அவற்றைச் சுத்தீகரித்து, பழம் பாண்டங்களைக் கழித்துப் புதுப்பாண்டங்களைக் கொண்டு, அவற்றிற் சங்கிராந்தி தினம் அமுதிடல் வேண்டுமென்றும், அன்றியும் மூதேவி யால் யாவரும் பீடிக்கப்பட்ட வத்தக்ஷிணாயன காலத்தில் புலிகள் பசுக் களைக் கொன்று தின்றுகொண்டிருந்தபடியால், சர்வவியாபக சிவபிரா னவர் சங்கிரமே சத்தியைவாட்டி, பசுக்களைக்கொண்டு புலிகளை ஓட்டி, அதஞ்செய்து பசுக்களுக்கும், மனுஷருக்குஞ் சௌக்கியத்தைத் தந் தருளிய காரணமாக மறுநாட்காலையில் பசுக்களுக்கு ஸ்நாந முதலிய அலங்காரமிட்டுப் பசுக்களை முன்னே போகுமாறு செய்து, பின்னே அச்சிவபிரானை எழுந்தருளச் செய்தே, யாவரும் அவரைப்பத்தியாய்ப் பூசித்து வழிபட்டு, வழுவாது முத்தி சித்தியை எய்தி உய்யவேண்டி யது என்றும் நூல்கள் கூறும். இத்தேயத்திலும் ஏனையவிடங்களிலும்'

Bleed through.

தைப்பொங்கலுக்கு முந்தியகாலமெல்லாம் விளைவு காலமாயிருந்து, அரிந்துசேருந் தானியங்களில் சூரியமுகாந்தரமாக அனைவர்க்கும் உலகத்தின் சகலவிளைவுக்கு வேண்டிய க்ஷேமத்தைத் தந்தருளிய முழுமுதற் கடவுளாகிய சிவபிரானுக்கு அன்பான நிவேதனமாய், முதலில் அறுக்கப்படுந் தானியத்தின் அரிசியைப் பாலும் வெல்லமும் சேர்த்துச் சமைத்து கிழங்குப் பண்டபலாதிகளோடு அமைத்துச் சூரியரூபமாக எழுந்தருளிச் சர்வான்மாக்களுக்கும் அநுக்கிரகிக்கும் பரமபதியாகிய சிவத்தைச் சித்தபத்தியாய்ப் பூசித்து, அவருக்குத் திருமுவது நிவேதித்து அவரைத்துதித்து வழிபட்டு உய்ந்து, தம்பந்துக்கள் முதலானவர்களுடன் உண்டுடுத்தும், கிருஷிகத்தொழிலில் உழவுக்கு மாடு இன்றியமையாத் துணையாகலான், அது யாண்டும் விருத்தியடைதல் வேண்டும் என்னும் பெருவிருப்போடு மறுநாட் பொங்கலிட்டுக் கடவுளுக்குப் படைத்து அவரைப்பூசித்து நேசித்துத் துதித்து வணங்கி, மாடுகளை அலங்கரித்து ஊர்வலம்வருவதும், ஓர் ஐதிகமாக யாவருங் கொண்டாடி வருகின்றார்கள் என்பதை நன்றே அறிக".

சைவ வைஷ்ணவ சமயிகள் மேற்கூறியவற்றை நன்கு சிந்தித்து, இக்காலத்து நாகரீகத்திற்கு இவை ஏற்கா என்னும் மௌட்டிகமான வெண்ணத்தை விடுத்து, மார்கழி மாதத்திலேயே தத்த மில்லங்களைப் புதுக்குவித்துக் கோலமிட்டுப் பழம் பாண்டங்கள் பழம் அடுப்பு முதலியவற்றைக் கழித்துப் புதியன வருவித்துக் குறித்த தினத்தில் விதிப்படி பழைமைபோல் தைப்பொங்கல் செய்தல்வேண்டும். அடுத்த நாட் கோக்களை நீராட்டி, விபூதி சந்தனங் குங்குமம் மாலை முதலியவற்றால் அலங்கரித்து, பட்டியிற் பொங்கிக் கோக்களுக்கு அருத்தி அவற்றைப் பூசித்தல் வேண்டும். தாம் தொன்றுதொட்டுத் தொழுது வருங் குலதெய்வங்கள் எழுந்தருளிய ஆலயங்களை யடைந்து, மகா சங்கிராந்தி தினத்தன்றேனும், அதையடுத்துவரும் மங்கலவாரத்திலேனும், சுக்கிரவாரத்திலேனும் பொங்கத்தக்கவிடமாயிற் பொங்கி நிவேதித்தும், அன்றேல் விசேட பூசை செய்வித்தேனும் வருதல் வேண்டும். இவைகளை யெல்லாம் நமது முன்னோர் செய்தவாறாகச் செய்துவரின், இப்பொழுது நம்மைப் பீடித்துவரும் பஞ்சம் முதலியன நீங்கும்.

---

## பஞ்சபூத உற்பத்தி

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐந்தும் தூல பூதங்களெனப்படும். இவை யொன்றி னொன்றாகக் காரியப்பட்டுத் தோன்றின வென்பது மாயாவாதிகள் கொள்கை. சைவ சித்தாந்தக் கொள்கை அதுவன்று. அவை தூல பூதங்களாகையால், அவற்றிற்குக் காரணமாகிய சூக்கும பூதங்களிலிருந்து தோன்றின வென்பதே சைவ சித்தாந்தக் கொள்கையாம். சூக்கும பூதங்களாவன சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம் என்னும் தன்மாத்திரை ஐந்துமாம். தன்மாத்திரை காரண தன்மாத்திரை யெனவும், விடய தன்மாத்திரை யெனவும் இருவகைப்படும். அவற்றுள் காரண தன்மாத்திரையே சூக்கும பூதமாகும்.

இச்சூக்கும பூதங்களில் சத்தத்தினின்று ஆகாயம் தோன்றும். பரிசத்தினின்று வாயு தோன்றும். உருவத்தினின்று தேயு தோன்றும். இரதத்தினின்று அப்பு தோன்றும். கந்தத்தினின்று பிருதிவி தோன்றும்.

சூக்கும பூதமாவது குணசமூகமாய் அருவமாய் நிற்குநிலை. அவ்வியக்தமாய் நுண்ணிதாய் நிற்கும் நிலை யென்றும் சொல்லலாம். தூல பூதமாவது அக்குணங்களும் பொருளும் வியக்தமாய் எவர்க்கும் புலனாம்படி தூலமாய் நிற்குநிலை. ஆகாயமும் அதன் சத்தகுணமும் எவர்க்கும் புலனாம். வாயுவும் அதன் சத்தம், பரிசம் என்னும் இரண்டு குணங்களும் எவர்க்கும் புலனாம். தேயுவும் அதன் சத்தம், பரிசம், உருவம் என்னும் மூன்று குணங்களும் எவர்க்கும் புலனாம். அப்புவும் அதன் சத்தம், பரிசம், உருவம், இரதம் என்னும் நான்கு குணங்களும் எவர்க்கும் புலனாம். பிருதிவியும் அதன் சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம் என்னும் ஐந்து குணங்களும் எவர்க்கும் புலனாம். சூக்கும பூதமாகிய தன்மாத்திரைகள் இவ்வாறு புலனாகா. அவை புலனாதலின்றி நுண்ணிமைப்பட்டு மறைந்து நிற்கும்பொழுது சூக்கும பூதமெனவும், எவர்க்கும் புலனாம்படி தூலமாய் வெளிப்பட்டு நிற்கும் பொழுது தூல பூதமென்னவுமாகிய இந்த வேற்றுமையே அவ்விரண்டிடத்து முள்ளன. ஓர் ஆலம் விதையினுள்ளே பின்னர்த் தூலமாய்க் காணப்படும் வேர், மரம், சாகை, இலை முதலிய வெல்லாம், முன்னர் விதையா யிருக்கும்போதே நுண்ணிதாய் அடங்கி நிற்கக் காண்கிறோம். பின்பு பிற காரணங்கள் சேர்ந்த வழி அவை தூலமாய் வெளிப்பட்டு எவர்க்கும் புலனாம்படி நிற்கக் காண்கின்றோம். காரணமாகிய விதை

யில் மரம் சூக்குமமாயிருந்ததும் காரியப்பாட்டில் தூலமாய் நின்றதுமே அவ்விரண்டிடத்துமுள்ள வேறுபாடாம்.

இப்படியே தன்மாத்திரையில் பஞ்சபூதமாகிய பொருள்களும் அவற்றின் குணமும் சூக்குமமாய் நின்று பின்பு அவை தூலப்பட்டுத் தோன்றும்.

இவ்வுண்மை யறியாத மாயாவாதிகளிற் சிலர் தம்மதத்துக்குக் கேடுவருமாறு ஆகாய முதலிய பூதங்கள் ஒன்றினொன்றாய்த் தோன்று மென்று ஸ்மார்த்தமதம் பற்றி வாதிக்கின்றனர். மிருதி நூல்கள் பிரம பூதாண்டத்திற்குக் காரணம் பிரமமென்றும் அப்பிரமத்தினின்று ஆகாய முதலிய தத்துவங்கள் ஒன்றினொன்றாய்த் தோன்றும் என்றுங் கூறும். அது மிருதி மதமாமன்றி ஏனைய வேதங்கள் புராணங்கள் இதிகாசங்களுக்கு உடம்பாடாக மாட்டாது. சூக்கும பூதங்களினின்றே தூல பூதங்கள் பிறந்தன வென்பது மற்றெல்லா நூல்கட்கும் கருத்தாம். இங்ஙனமாக, ஸ்மிருதியின் ஆசாரங்களையும் மதத்தையுமே தம்மதமாகக் கொண்டிருந்த ஸ்மார்த்த மதத்தர் சிலர் பிற்காலத்தில் மாயாவாத போதனையின் மருண்டு மாயாவாதிகளாகியும், தம் பண்டை ஸ்மார்த்த மதத்துக்கும் புதிய மாயாவாதத்திற்கும் வேறுபாடறியாமல் ஒன்றாகக் கொண்டு ஒன்றை மற்றொன்றோடு கலந்து குழறுபடையாகப் பேசுவர்.

இனி ஆகாய முதலிய பூதங்கள் ஒன்றினொன்றாய்த் தோன்ற இயையுமா வென்பதனைப் பொருந்துமாற்றின் வைத்து விசாரிப்பாம்.

ஆகாயம் சத்தமாகிய ஓரே குணமுடையது. வாயு சத்தத்தோடு பரிசமும் ஆகிய இரண்டு குணமுடையது. தேயு சத்த பரிசங்களோடு உருவமுமாகிய மூன்று குணமுடையது. அப்பு சத்த பரிச உருவங்களோடு இரதமுமாகிய நான்கு குணமுடையது. பிருதிவி சத்த பரிச உருவ இரதங்களோடு கந்தமுமாகிய ஐந்து குணமுடையது. இவ்வாறு ஆகாய முதலிய பூதங்கள் முறையே ஒன்றும் இரண்டும் மூன்றும் நான்கும் ஐந்துமாகிய குணவேறுபாடுடையன.

எப்பொழுதும் காரண காரியங்களின் வேற்றுமை யாதெனின், சூக்குமமாயிருத்தலும் பின்பு தூலப்படுதலுமாகிய இவையேயாகும். பிருதிவிக்கு அப்பு காரணமென்னின், பிருதிவியிலுள்ள சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம் என்னும் ஐந்து குணமும் அப்புவிலிருக்கவேண்டும். அப்புவுக்குத் தேயு காரணமென்னின், அப்புவிலுள்ள சத்தம், பரிசம், உருவம், இரதம் என்னும் நான்கு குணமும் தேயுவிலிருக்க வேண்டும். தேயுவுக்கு வாயு காரணமென்னில், தேயுவிலுள்ள சத்தம், பரிசம், உருவம் என்னும் மூன்று குணமும் வாயுவி லிருக்கவேண்டும்.



வாயுவுக்கு ஆகாயங் காரணமென்னில், வாயுவிலுள்ள சத்தம், பரிசம் என்னும் இரண்டு குணமும் ஆகாயத்தி லிருக்கவேண்டும். ஆகாயத் திலே வாயுவின் சிறப்புக் குணமாகிய பரிசமில்லை. பரிச குணமில்லாத ஆகாயம் பரிச குணமுடைய வாயுவுக்குச் சூக்கும நிலையாகிய காரண மாகமாட்டாது.

வாயுவில் தேயுவின் சிறப்புக் குணமாகிய உருவமில்லை. ஆதலால், உருவகுணமில்லாத வாயு உருவகுணமுடைய தேயுவின் சூக்கும நிலை யாகிய காரணமாகமாட்டாது.

தேயுவில் அப்புவின் சிறப்புக் குணமாகிய இரதமில்லை. ஆதலால், இரத குணமில்லாத தேயு இரத குணமுடைய அப்புவின் சூக்கும நிலையாகிய காரணமாகமாட்டாது.

அப்புவில் பிருதிவியின் சிறப்புக் குணமாகிய கந்தமில்லை. ஆத லால், கந்த குணமில்லாத அப்பு கந்த குணமுடைய பிருதிவியின் சூக்கும நிலையாகிய காரணமாகமாட்டாது.

அன்றியும், ஆகாயத்தில் சத்தமொன்றேயன்றி ஏனைய நான்கு குணமுமில்லை. வாயுவில் சத்தமும் பரிசமுமாகிய இரண்டுமேயன்றி ஏனை மூன்று குணமுமில்லை. தேயுவில் சத்தம், பரிசம், உருவமாகிய மூன்றுமேயன்றி ஏனை இரண்டு குணமுமில்லை. அப்புவில் சத்தம், பரிசம், உருவம், இரதங்களேயன்றி கந்த குணமில்லை. ஆதலால் காரணத்தி லில்லாத குணம் காரியத்திலுண்டாக யாதோ ரேதுவுமில்லை. இல்லது வாராது உள்ளது போகாது என்னும் நியமத்தால், முன்னர் இல்லாத குணம் பின்னர் உண்டாகமாட்டாது. நெல்லின்கண் நெற்பயிரும், பாக்கின்கண் கமுகும், தேங்காயில் தென்னையும், ஆலம் வித்தின்கண் ஆல மரமும் உண்டாமன்றி ஏனையொன்றும் உண்டாகமாட்டாது. நெல் கமுகாய் வந்ததும், பாக்குத் தென்னை, மா, பலா முதலியவாய் வந்ததும் இல்லை. அதற்கு ஏது வென்னை? உள்ளதே தோன்று மென்பதனாலன்றோ. மாயாவாதிகள் இவ்வுண்மை யறியாது பூதங்கள் ஒன்றினின்று ஒன்று தோன்றுமென வாதிப்பர். அது பதார்த்த வுணர்வில்லாமையா லெழுந்த வாதமாம்.

இனி இக்காலத்தொரு மாயாவாதியார் ஆகாயம் வாயு தேயு அப்புக்களில் ஐந்து குணமும் மறைந்திருந்தன வென்றும், பின்பு அவை பிருதிவியானபொழுது ஐந்து குணமும் வெளிப்பட்டன வென்றும் எழுதுகின்றார். தூல குணமுடைய தூலப்பொருளில் மற்றொருகுணம் சூக்குமமாய் இருந்ததென்றல் பெரியதோ ரறியாமையாம். சூக்குமப் பொருளில் அதன் குணம் சூக்குமமாயிருக்கும். தூலப்பொருளில்

அதன் குணம் தூலமாயே யிருக்கும். அங்ஙனமன்றித் தூலப்பொருளில் ஒருபொழுதும் தூலமாதலன்றி ஒரு குணம் சூக்குமமாயிருக்க மாட்டாது. மஞ்சளில் உள்ள செம்மை பொன்மை முதலிய உருவ குணங்கள் பாகங் காரணமாக அவ்வப்பொழுது புலப்படுகின்றன. அவை தூலப்பொருளில் தூல உருவமாகத் தோன்றுகின்றன.

அந்நிறங்கள்யாவும் தூலமேயாம். அதுபோல நீரினிடத்துக் கந்த குணமும், தேயுவினிடத்து இரதகந்தங்களும், வாயு முதலியவற்றில் மற்றைக் குணங்களும் உள்ளனவாயின், யாவும் அவ்வப் பூதங்களிலேயே யாதானுமோ ரேதுவான் வெளிப்படல் வேண்டும். அங்ஙனம் யாண்டுங் காணப்படாமையால் இவர் வாதம் பிரத்தியக்ஷ விரோதம். இலிங்க பராமரிச மின்மையால் அனுமானமுமன்று. இவ்வாறு யாண்டுங் கூறப்படாமையால் சுருதிப் பிரமாணமுமன்று. இப்படி எவ்வகைப் பிரமாணமுமின்றி யெழுதுதல் அவிவேகமன்றி விவேகமாக மாட்டாது.— ஞானசித்தி.

பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி.

என்னும் திருவாசகமும்,

மண்ணதனி லைந்தை மாநீரினான்கை
வயங்கெரியின் மூன்றை மாருதத்திரண்டை
விண்ணதனி லொன்றை விரிகதிரைத்
தண்மதியைத் தாரகைக டம்மின்மிக்க
எண்ணதனி லெழுத்தை யெழிசையைக்
காமனெழிலழிய வெரியுமிழ்ந்த யிமையாநெற்றிக்
கண்ணவனைக் கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனானே.

என்னும் திருத்தாண்டகமும்,

பூநிலாய வைந்துமாய்ப் புனற்கணின்ற நான்குமாய்
தீநிலாய மூன்றுமாய்ச் சிறந்தகா லிரண்டுமாய்
மீநிலாய தொன்றுமாகி வேறுவேறு தன்மையாய்
நீநிலாய வண்ணநின்னை யார்நினைக்க வல்லரே.

என்னும் வைணவப் பிரபந்தமும் ஈண்டு சிந்திக்கற்பாலன.

"சைவம்" ஆசிரியர்.

## இடக்கரடக்கல்

செந்தமிழ் 19-ம் தொகுதி 6-ம் பகுதியில் திருவனந்தபுரம் ஸ்ரீமான்-N. சிவராஜபிள்ளை யவர்கள் 'நமது காவியங்களிற் சன்மார்க்க நாசத்துக் கேதுவான கதைகளும் வருணனைகளும் மலிந்து கிடக்கின்றன' என்னும் பகுதியில் "சைவ சமய ஆசாரியர்களின் தலைவரான ஞானசம்பந்தருங்கூடப் பாண்டிமா தேவியை வருணிக்குமிடத்து, 'பையரவ..............பாண்டிமாதேவி' என்று கூறி நம்மைப் பிரமிக்கச் செய்கின்றார்" என்று எழுதி யிருக்கிறார்கள். காலஞ் சென்ற ஸ்ரீமான்-சி. வை. தாமோதரம்பிள்ளை யவர்களும் இவர்களைப் போன்றே கருதித் தாம் பிரசுரித்த கலித்தொகையில் அல்குல் என்னும் சொல் வருமிடங்களி லெல்லாம் அதனை நீக்கி வேறு சொற்களையேனும் சொற்றொடர்களையேனும் பெய்தார்கள். அன்றியும் அவர்கள் அச்சொல்லைக் கூறும் பொழுது 'குலைதொடர்ந்த அன்மொழி' யென்று பிரயோகித்தார்கள்.

சொற்பொரு ளுணர்த்தும் தமிழ் நூல்கள் திவாகரம் நிகண்டு முதலியனவேயாம். அவைகளில் திவாகரத்திலும், சூடாமணி நிகண்டிலும் அல்குற் பதத்திற்குப் பிரதிபதமாகக் கடிதடம், நிதம்பம் என்றிரண்டு சொற்கள் காணப்படுகின்றன. உரிச்சொல் நிகண்டில் அல்குலின் பரியாயப் பெயர்களாக அரை, நிதம்பம் என்னும் இரண்டுமே காணப்படுகின்றன. பிங்கலந்தையில் மேற்கூறியவற்றோடு உபத்தமுங் கூறப்பட்டிருக்கின்றது. இவைகளில் அல்குற்கும் ஜனனேந்திரியத்திற்கும் காணப்படும் பரியாய பதங்கள் வெவ்வேறாம்.

இனிப் பெண்களது அவயவங்களை வருணிக்கப் புகுவார்க்கு அவற்றிற்குரிய வுவமைகளைக் கூறுவதாய்ப் புகழேந்திப் புலவராற் செய்யப்பட்டிருக்கும் 'உவமான சங்கிரகம்' என்னும் நூலிலும், மதுரைத் தமிழ்ச் சங்கத்து 36-வது பிரசுரமாக வெளிவந்திருக்கும் 'உவமான சங்கிரகம்' என்னும் நூலிலும் அல்குற்கும் ஜனனேந்திரியத்திற்கும் வெவ்வேறு உவமைகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

அல்குலின் பரியாயப் பெயராகிய கடி தடம் என்பது கடி, தடம் என்பன சேர்ந்தாகியது. தடம் என்பது சரிவுப் பக்கங்களையுடைய அவயவங்களைக் குறிப்பதற்கு வருஞ் சொல்லாம். கடி என்பது பிருஷ்டத்தின் பெயராக வடமொழியிற் காணப்படுகின்றது. ஆகவே கடி தடம் என்னுஞ் சொல் இடுப்புக்குக் கீழுள்ள பின் பாகத்தைக் குறிக்கும். கடி சூத்திரம் என்பனவற்றிற்போல கடி தனித்து நின்று இடுப்பை

யுணர்த்துவது முண்டு. கலித்தொகையில் 'மூவழிப் பெருகி' என வருதலினும் அல்குல் இடுப்பின் கீழுள்ள பின் பாகத்தையே குறிக்கும் என்பது பெறப்படும்.

நிதம்பம் என்னுஞ் சொல்லுக்கு அமரகோசம் பெண்களின் இடுப்புக்குக் கீழ்ப்பட்ட பின் பாகம் என்னும் பொருளைத் தருகின்றது. பஶ்சாத் நிதம்ப : II மனுஷ்யவர்க்கம் 74. ஆப்டி என்பவரும் அச்சொற்கு இடுப்பும் அதன் பின்புறமும் என்றே பொருள் கொள்ளுகின்றார்.

நமது சிவராஜ பிள்ளையவர்களால் பாராட்டப்படுகிற கம்பராமாயணத்தில் ராமபிரான் அனுமானைச் சீதையை நாட அனுப்பும் பொழுது அனுமான் சீதை இவள் என்று ஐயந்திரிபற அறிவதற்கு அனுகுணமாக அவளது அவயவங்களை வருணித்துக் கூறுமிடத்து அல்குலுங் கூறப்பட்டிருக்கின்றது.

அல்குல், கடி தடம் என்னும் பதங்கள் ஆண்மக்களை வருணிக்குமிடத்தும் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. "பூந்துகில் சேரல்குல் காமர் எழில்விழவுடுத்து" எனத் தசரதன் ராமனை நோக்கிப் புலம்புவதாகக் குலசேகராழ்வார் கூறுகின்றார். தவநிலையில் நின்ற அருச்சுனனும் வேடவடிவங் கொண்டுவந்த சிவபெருமானும் மற்போர் செய்கின்ற காலத்தில் கடிதடத்தாலும் மற்போர் செய்தாரென்று வில்லிபுத்தூரார் கூறுகின்றார்.

உபத்தம் என்பது சமீபத்திலிருப்பது என்னும் பொருளைத்தரும். அல்குற்பதம் தமிழ் நூல்களிற் சில விடங்களில் இடக்கரடக்கலாக உபயோகிக்கப்படுவதுண்டு. அதுபோல வடசொற்களுள் உபத்தமும் உபயோகிக்கப்படும். இவ்வுபத்த மென்னுஞ் சொல்லும் இருபாலார் அவயவங்களுக்கும் பொதுவாக உபயோகப்படுதல் சமய நூல்களிற் காணப்படுகின்றது.

ஒரு சொல்லின் செம்பொருளுக்கும் இடக்கரடக்கற் பொருளுக்கும் வேற்றுமை தெரிந்துகொள்வது உண்மைப் பொருள் தெரிவார் கடனும். ஒரு சொல் உவமை தொடர்ந்து வருவதே அச்சொல் இடக்கரடக்கலன்றென்பதை நாம் சிறிதும் பிரமித்தற் கிடமின்றித் தெளிவுபெறக் குறிக்கும். மேற்கூறியவற்றை யுணர்ந்து சம்பந்த மூர்த்திகள் தேவாரத்தின் உண்மைப்பொருள் உணர்ந்துகொள்ளுதல் அறிவுடையார்க்குக் கடனும்.

பேட்டை, 6-10-21. ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை.

# மெய்கண்டதேவர் அவதாரகாலம்

## கம்பர் இராமாயணம் இயற்றிய காலத்திற்கு முந்தியா பிந்தியா ?

நமது நண்பர் ஸ்ரீமான்-K. சீனிவாசப்பிள்ளை அவர்கள் சென்ற புரட்டாசி மாதத்திய பத்திரிகையில் சைவசந்தான குரவர்கள் நால்வருடைய சரித்திரத்தை நன்றாயும் விரிவாயு மெழுதியுள்ளார்கள். அதில், மெய்கண்டதேவராகிய முதற் குரவரை மகா கவியாகிய கம்பர், தாமியற்றிய இராமாயணத்தில் புகழ்ந்திருப்பதாகக் காட்டுகின்றார்கள். யுத்தகாண்டம், திருமுடிசூட்டுப் படலத்தில் "அரியணை யனுமன்றாங்க" வென்னுஞ் செய்யுளின் மூன்றாம் அடி ஐந்துவித பாட பேதங்களுடன், ஏட்டுப் பிரதியிலும், அச்சுப் பிரதிகளிலுங், காணப்படுகின்றது. அது வருமாறு.

I "விரிகடலுலகங்காக்கும் வெண்ணெமன் சடையன் வண்மை, மரபுளோர்" * * *

II. "விரதமாதவர்களேத்த வெண்ணெயூர்ச் சடையன் முந்தை, மரபுளோர்" * * *

III. "விரைசெறி குழலியோங்க வெண்ணெயூர்ச் சடையன்றங்கள், மரபுளோர்" * * *

IV. "விரை செறிமாலை மார்பன் வெண்ணெ நல்லூரான்றன்ன, மரபுளோர்" * * *

V. "உரிமையி னயோத்தியுள்ளார் உரைசெய வெண்காடன் வந்த, மரபுளோர்" * * *

சடையப்ப வள்ளலாரின் மரபினரைப் புகழ்ந்த இடமிது. பிள்ளையவர்கள் ஐந்தாவது பாட பேதத்தைக் கைக்கொண்டு அதில் காணப்படும் வெண்காடன் என்ற சொற்றொடருக்கு மெய்கண்ட தேவர் எனப் பொருள்கொண்டு கம்பர் மெய்கண்ட தேவரைப் புகழ்ந்திருப்பதாகச் சொல்லுகின்றார்கள். மெய்கண்ட தேவருக்குச் சுவேதவனப் பெருமாள் என்னும் பெயர் அவர்கள் தாய் தந்தையர்களால் இடப்பட்ட பிள்ளைத்திருநாமம். சுவேதவனப் பெருமாள் என்னும் வடமொழிக் கலப்புப்பெயரைத் தமிழில் வெண்காடன் என மாற்றிக் கொண்டார்கள் போலும். சைவசித்தாந்த தமிழ்ச் செய்யுள் நூல்களில் மெய்கண்ட தேவரது பிள்ளைத் திருநாமத்தைக் குறித்தபோதெல்லாம் சுவேதவனப் பெருமாள், சுவேதவனன், எனக் குறித்திருக்கின்றதே யொழிய வெண்காடன் எனப் பெரும்பாலும் பிரயோகித்திருப்பதாகக் காணேம். மெய்கண்டதேவர் சரித்திரம் தமிழில் எழுதினோரும் அவ்வாறே கொண்டிருக்கின்றார்கள். சுவேதவனப் பெருமாளுக்கு இரண்டாம் ஆண்டிலேயே மெய்கண்டதேவர் எனத் தீட்சாநாமங் கொடுக்கப்

பட்டு அக்காலம் முதல் தமிழ்நாடு முழுதும் அப்பெயரே அவருக்கு வழங்கலாயிற்று. தமிழ் நாட்டில் சைவநூல் கற்ற யாரையாயினும் வெண்காடர் என்பார் யாரென வினவின், பட்டினத்தடிகளென உடனே உத்தரமளிப்பார்கள். பட்டினத்தடிகளுக்கு அவர்கள் தாய் தந்தையரால் சூட்டப்பட்ட இயற்கைப் பெயர் வெண்காடரென்பதே. இவர்கள் காலம் கி. பி. பத்தாம் நூற்றாண்டென இக்காலச் சரித்திர ஆராய்ச்சியார் கண்டுள்ளார்கள். இராகவய்யங்கார் அவர்கள் ஆராய்ச்சிப் படிக்குள்ள கம்பர் காலத்துக்கு முந்தியதே பத்தாம் நூற்றாண்டு. ஆனதால் விவாதச் செய்யுளில் காணப்படும் வெண்காடர் என்ற பிரயோகம் மெய்யாகவே கம்பருடையதா யிருக்குமானால், அதற்குப் பொருள் பட்டினத்தடிகளென்றே இராகவய்யங்கார் கொண்டிருந்தால் மிகப் பொருத்தமாம். ஆனால் இதில் ஒரு சங்கை யெழலாம். பட்டினத்தடிகளை வைசிய மரபினரென அவர்கள் சரித்திரத்தில் வழங்கப்பட்டிருக்கின்றது. சடையப்பவள்ளலார் சைவவேளாள குலத்தவர். இது எவ்வாறு பொருந்துமெனில், தமிழ் நாட்டில் சைவவேளாண் குலத்தவரைப் பூவைசியரென்று தமிழ் நிகண்டு ஆகிய நூல்களினால் சொல்லுவதைக் கருதில், இவ்வாசங்கை யிலதாகும். பட்டினத்தடிகளுக்குச் சைவ வேளாளர் குலத்துப் பட்டப்பெயராகிய பிள்ளை யென்ற பட்டப் பெயரிட்டுத் தமிழுலகம் மகிழும்.

"பட்டினத்துப் பிள்ளையினைப் பத்ரகிரியைப் பரவி
விட்டுவிடமாட்டார் வெறு வீடர்"

என்று கண்ணுடைய வள்ளலாரும்

"பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல்
யாருந் துறக்கை அரிதரிது"

என்று தாயுமானாரும் அருளியிருப்பதனால் அறியலாம். நிற்க,

கம்பர் இராமாயணம் பாடிய காலத்தில் மெய்கண்டதேவர் அவதரித்திருந்தனரா வென்பதை இனி ஆராய்வாம். கம்பர் இராமாயணம் அரங்கேற்றிய காலம் கி. பி. * 1185 என மதுரை தமிழ்ச் சங்கம் இராகவய்யங்கார் பல ஆராய்ச்சியால் கணக்கிட்டார். அன்றியும் கம்பர் காலம் கி. பி. 1120-க்கும் 1200-க்கும் இடைப்பட்டதாதல் கண்டு கொள்க வெனவும் † அவர் எழுதியிருக்கின்றார். அரங்கேற்றிய காலத்துக்குச் சில ஆண்டுகளுக்கு முன்னரே இராமாயணத்தைக் கம்பர் பாடி முடித்திருக்கவேண்டும். பாடி முடித்தபின்னர் பல நாடுகளுக்கும் நகரங்களுக்கும் கம்பர் சென்று தாம்பாடிய இராமாயண நூலைப் பற்பல வித்துவான்களிடம் காட்டியும் பிரசங்கித்தும் அவர்கள் சம்மதம் பெற்றதாகவுந் தெரிகின்றது. சிதம்பரத்திலும் சீரங்கத்திலும் அனுமதி

* செந்தமிழ் III-ம் பகுதி 179-ம் பக்கம் பார்க்க.

† செந்தமிழ் III-ம் பகுதி 181-ம் பக்கம் பார்க்க.



பெறும் பொருட்டுப் பல நாட்கள் காத்திருந்ததாகவும் கர்ன பரம்பரையாய்ச் சொல்லப்பட்டும் வருகின்றது. இவைகளுக்கெல்லாம் போதுமான காலம் 10-ஆண்டுகளாவது பிடித்திருக்கவேண்டும். இதனால் கி. பி. 1175-ல் கம்பர் இராமாயணம் பாடி முடித்தார் என்று கொள்ள நியாய மிருக்கின்றது. [இராகவய்யங்கார் கணக்குப்படி 1178-ஆகிறது.] இந்தக் காலத்தில் மெய்கண்டதேவ நாயனார் ஜநநமாயிருந்தார்களா வென்பதை யிப்போது ஆராயலாம். உமாபதிசிவம் காலம் கி. பி. 1314-க்கு முன் பின்னென்று அவர்கள் வாக்கினாலேயே திட்டமாய்த் தெரிகிறது. உமாபதிசிவமோ சீடபரம்பரையில் மெய்கண்டருக்கு நான்காவதாகின்றார். தகப்பன் பிள்ளை முறையிலே வரும் பரம்பரைபோல் ஒவ்வொருவருக்கும் 30-வருடக் காலங் கொடுத்து 4×30=120 ஆண்டுகளுக்கு உமாபதிசிவத்துக்கு முற்பட்டவர் மெய்கண்டதேவர் எனச் சொல்வதற்குச் சிலாசாஸன ஆராய்ச்சி கோபிநாதராவுக்கு இடங்கொடாததினால், திருவண்ணாமலையில் கண்ட கல்சாஸனமொன்றை உடன்பாடாகக் கொண்டு மெய்கண்டார் காலம் கி. பி. * 1232 எனக்கொள்ளலா மென்றனர். நமது நண்பர் சீனிவாச பிள்ளை அவர்களோ "சந்தானாசாரியர்கள் நால்வரும் பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி தொடங்கி பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதிவரை யிருந்தவராவர்" என † முடிபுக்கு வந்தார். இதனால் முதற் சந்தான குரவராகிய மெய்கண்டதேவ நாயனார் கி. பி. 1150 அல்லது அதற்குச் சற்றுப் பிந்திய காலத்தவராவர். அதாவது காலக் குறிப்புத் திட்டமாய்த் தெரிகிற உமாபதி சிவத்தின் காலமாகிய கி. பி. 1314-க்கு, 82-வருடத்துக்கு முந்தியவர் மெய்கண்டாரென்று கோபிநாதராவு ஆராய்ச்சியாலும் 164 ஆண்டுகளுக்கு முந்தியவரென்று சீனிவாசபிள்ளை அவர்கள் ஆராய்ச்சியாலும் துலங்குகின்றது. மெய்கண்டாருக்கும் உமாபதிசிவத்துக்கும் இடைக்காலம் கோபிநாதராவு கணக்குப்படிகூட 82-ஆண்டுகள் இருந்திருக்குமென்று கொள்வதற்கிடமில்லை. எவ்வாறெனில் மெய்கண்டார் ஜநநமானதே அவர் தாய் தந்தையின் குலகுருவாகிய சகலாகம பண்டிதர் உபதேச வாக்கின்படி அவர்கள் (தாய்தந்தையர்) அனுஷ்டித்த தபோபலத்தினாலெனச்சரிதங் கூறுகின்றது. சகலாகம பண்டிதரோ மிக்க பிரசித்திபெற்றவராய் அநேக சீடர்களோடுங்கூடி நேபாளம், காசி முதலிய வெகு தூரத்திலுள்ள க்ஷேத்திரங்களுக்குச் சிவிகை முதலிய வாகனங்களிலூர்ந்து சென்று யாத்திரை முடித்தவர். இதன் பின்னரே மெய்கண்டதேவர் ஜநநமானார். இவர் சாம்சித்தரானதால் இரண்டா மாண்டிலேயே ஞானோபதேசம் பெற்றுப் பொல்லாப் பிள்ளையார் அநுக்கிரகத்தினால் சுத்தாத்துவித சித்தாந்த சைவத்தின் முதற் குரவராகிப் பல சீடர்களோடுங் கூடித் தமிழ் நாடெங்கும் பிரசித்திபெற்று ஞான சூரியனாக ஐந்தாம் ஆண்டுக்குள் விளங்கினார்.

* செந்தமிழ் III-ம் பகுதி பக்கம் 190.

† சைவம் மலர்-8. இதழ் 6-பக்கம் 116.

அந்த இளமைப் பருவத்திலேயே, மெய்கண்டார் தாய் தந்தைகளின் குலகுருவாகிய மேற்சொன்ன சகலாகம பண்டிதர் மெய்கண்டாரைத் தமக்கு ஞான குரவராகக்கொண்டு அருணந்தி சிவாசாரியரெனத் தீட்சா நாமமும் பெற்றுச் சிவஞானசித்தியா ரென்னுஞ் சைவசித்தாந்தத் தமிழ் நூலைச் சிவஞான போதமென்னும் முதனூலுக்கு வழி நூலாக விரித்துப் பாடினர். ஆனதால் மெய்கண்டாரிடம் உபதேசம் பெற்ற காலத்தில் சகலாகம பண்டிதர் மெய்கண்டாரைவிட அநேக ஆண்டுகள் மூத்தவராகவே யிருந்திருக்க வேண்டு மென்பதில் சற்றுஞ் சந்தேகமில்லை. மேலும் அக்காலத்திலேயே இவர் சீடர் மறைஞான சம்பந்தருமிருந்திருக்க வேண்டும். ஏனெனில் சகலாகம பண்டிதர் மெய்கண்டாருடைய அனுக்கிரகம் பெறுவதற்கு முன்னரேயே அநேக சீடர்களுடனே விளங்கியவர். இவ்வாராய்ச்சியால் மெய்கண்டதேவர், இவர் சீடர் சகலாகம பண்டிதரென்னும் அருணந்தி சிவாசாரியார், இவர் சீடர் மறைஞான சம்பந்தர், இம்மூவரும் சமகாலத்தவரெனத் துலக்கமாகின்றது. உமாபதிசிவத்தின் காலம் மட்டும், மெய்கண்டதேவர் சிவத்தோடு கலந்த பின்னரே யெனக்கொள்ள வேண்டியிருக்கின்றது. ஆனதால், மெய்கண்ட தேவருக்கும் உமாபதி சிவத்துக்கும் ஒரு தலைமுறை 30 வருடமே மத்திய காலமெனக் கொள்ளவேண்டும். உமாபதி சிவம் காலமாகிய கி. பி. 1314-ல் இந்த முப்பதைக் கழிக்க ஏற்படும் 1284-தான் மெய்கண்டார் காலமாகும். கம்பர் இராமாயணம் பாடிய காலம் மேலே வரையறுக்கப்பட்டபடி 1175-அதனை அரங்கேற்றியது 1185-மெய்கண்ட தேவருக்கு 109-ஆண்டுகளுக்கு முந்தியே பாடப்பெற்ற கம்பராமாயணத்தில் மெய்கண்ட தேவரை யெடுத்தாண்டிருப்பதாகச் சொல்லுவது அசம்பாவிதமாம். ஆனதாற்றான், இவ்வகை ஆராய்ச்சியில் வல்லுனராகிய இராகவய்யங்காரும், பலபாட பேதங்களாகக் காணப்படுபவைகளில் வெண்காடனெனும் பெயர்காணும் பாடபேதத்தைப் [வெண்காடன் என்பதற்கு மெய்கண்டார் எனத்திரிப்பு பொருள்கொண்டு] பிற்காலத்தார் இடைமடுத்தன ரென்னும் ஐயமுற்றெழுதினர்.

இவ்வளவு விரித்தெழுதியதூஉம், இராகவய்யங்கார் கம்பர்கால அளவை ஓர் விதமாய்க் குறிப்பிட்டிருப்பதை ஆதரவு செய்வதற்காகவே. இனி உண்மை யாது என்று ஆராய்வாம். பண்டையோர் கொண்டிருந்த கம்பர் காலத்தைக் காட்டுஞ் செய்யுள் "எண்ணிய சகாத்த மெண்ணூற்றேழின் மேற் சடையன் வாழ்வு" என்னுஞ் செய்யுளுக்குத் தம் கொள்கைக்கு இணங்கப் பொருள்கொள்ள வேண்டிப் பதங்களைத் தம் இஷ்டம்போல் பிரிக்காமற் செம்பாகமாகச் சகாப்தம் 807-எனப் பொருள்கொண்டு விட்டால், மெய்கண்ட தேவருக்கு அநேக நூற்றாண்டுகளுக்கு முற்பட்டது கம்பர்காலமாகுமானதால் ஓர் வித விவாதமுமில்லாமல் வெண்காடன் என்னும் பிரயோகம் இடைச்செருகலென்றே உறுதியாய்ச் சொல்லலாம்.



மேல் விசாரத்தால் வெண்காடர் எனுஞ் சிறப்புப் (காரண) பெயர் பட்டினத்தடிகளையும் மெய்கண்ட தேவரையும் தனித்தனியே குறிக்கும் மொழி யென்பது ஒருவகைத் துணிபாயிருக்கின்றது. மகா கவியாகிய கம்பர் இவ்வாறு மயக்கப் பொருளைத் தரும் பதத்தைப் பிரயோகித்திருப்பாராவெனவும் ஓர் சங்கையுண்டாம். இது நிற்க.

மெய்கண்டதேவர் சரித்திரத்தைச் செய்யுள் முகமாகக் கூறியிருக்கின்ற சுவாமிநாததேசிகருள்ளிட்ட பல்லோரும் மெய்கண்டதேவரின் நன் மாமனார் பெயரைக் குறிப்பிட்டெழுதவில்லை. சென்னை சண்முகசுந்தர முதலியார் ஒருவரே வேறு ஆதாரங்காட்டாது, காங்கேயபூபதி யென்று கூறியுள்ளார். இக்கூற்றுக்குத் தக்க பிரமாணங் காட்டும் வரை அதை ஒப்புவது உசிதமன்று. இவ்வாறே, மெய்கண்டார், அச்சுதகளப்பாளர் மனைவியார் திருவயிற்றில் கருப்பமுற்று அவதரித்தவரெனப் பல்லோரும் ஒரே மொழியாய்ச் சொல்லி வந்துகொண்டிருக்க முதலியாரவர்கள் மட்டும், தகுந்த பிரமாணங் காட்டாமல், முக்குளப்படியில் சிசுவாய்த்தோற்ற, அச்சுதகளப்பாளரால் கண்டு எடுக்கப்பட்டனரென்று எழுதியுள்ளார். இவ்விடயங்களெல்லாம் நூல் வல்லோர் பலரால் ஆராய்ச்சி செய்யப்பட்டு இன்னமும் உண்மை வெளிப்படுமென நம்புகின்றேன்.

9-12-22, திருச்சிராப்பள்ளி. திரு. மா. சாம்பசிவம் பிள்ளை.

---

## சென்னைச் சிவனடியார் திருக்கூட்டச் சிவதல யாத்திரை

### திருத்தணிகை - அரக்கோணம் - திருவாலங்காடு

இத்திருக்கூட்டத்தினர் நிகழும் 1922ஞு டிசம்பர்மீ 23உ சனி வாரம் மாலை சென்னையினின்றும் புறப்பட்டு திருத்தணிகையை யடைந்து ஆதிவாரம் முருகக் கடவுளுக்கு மகாபிஷேகாதி யுபசாரங்கள் செய்வித்து வழிபட்டார்கள். அவ்விடத்து போஸ்ட் மாஸ்டர் அவர்களும், அவ்விடத்தில், சத்திரத் திருப்பணி நடத்தும் ஸ்ரீமான் தக்கோலம் ஆலங்காட்டு முதலியாரவர்களும் இவர்களுக்கு வேண்டிய பல உதவிகளைச் செய்தார்கள். திருக்கூட்டத்தார் ஆதிவாரம் இரவு திருத்தணிகையிலிருந்து புறப்பட்டு சுமார் $7\frac{1}{2}$-மணிக்கு அரக்கோணம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வந்ததும், அந்நகர்ச் சிவநேயர்களும் ஸ்ரீமான் டி. கோபால செட்டியாரவர்கள் B. A. (ப்ளீடர்), தாசில்தார் அவர்கள், ஸப் மாஜிஸ்ட்ரேட் அவர்கள், போலீஸ் இன்ஸ்பெக்டரவர்கள், ஓவர்சியர் அவர்கள் முதலிய உத்தியோகத்தினர் பலருமாக எண்ணிறந்தவர்கள் ரெயில்வே ஸ்டேஷனில் வெற்றிடமிராதபடி நிரம்பி எதிர்கொண்டு, அழகிய தோரணங்களாலும், வரவேற்புரைகளாலும் வாழ்த்துரைகளாலும் மிகவும் அலங்கரிக்கப்பட்டிருந்த வீதிகளின் வழியாக, திருமுறை மகோற்சவ சகிதமாக, பல வாத்தியங்கள் கோஷிக்கவும்,

கொடிகள் பல அசையவும் குடைகள் கவியவும் சர்வாடம்பரமாக நகர் வலஞ் செய்வித்து நகர மகா மண்டபத்தில் அமர்வித்து அறுசுவை யமுதருத்தி யுபசரித்தார்கள். பின்னர் காலவளவிற்கேற்பச் சிறிது நேரம் திருக்கூட்டத்தினர் உபந்நியாசங்கள் செய்து தங்களை யுபசரித்த அந்நகரவாசிகளின் அன்பை மிகவும் பாராட்டி வந்தனமளித்து, பின் சிறிதுநேரம் நித்திரைசெய்து, சோமவாரம் வைகறையிற் பிரயாணமாகி திருவாலங்காட்டை யடைந்து அம்மையப்பருக்கு மகாபிடேகாதி யுபசாரங்கள் செய்து வழிபட்டு, அன்று மாலை திரும்பி வந்து சென்னைமா நகரடைந்தார்கள்.

---

## கோயில் தர்மகர்த்தர்கள் கடமை

நம் கோயில்களில் பலவகைப்பட்ட குறைகள் காணப்படுகின்றன. கோயில் திரவியங்கள் குருக்கள்மார்களுக்குக் கல்வி கற்பித்து அவர்களுடைய நல்லொழுக்கத்தைப் பாதுகாத்தலிலும், ஜனங்களுக்குச் சமயபோதனை செய்து கடவுள் வழிபாடு செய்வித்தலிலும் செலவிடப் படாமலே வேறு பல வழிகளில் செலவிடப்படுகின்றன. இதனுல் ஜனங்களுக்குப் பத்தி குறைந்து கோயில்கள் அனுவசியமெனத் தோன்றுகிறது. கோயிற் சொத்துகளை வைத்தியசாலை முதலியவைகளுக்குப் பயன்படுத்தவது உசிதமென்று அரசாங்கத்தில் செல்வாக்குடையவர்கள் சிலர் கருதுகிறார்கள். இதன் பொருட்டுச் சட்டசபைக்கு ஒரு மசோதாவும் வந்திருக்கிறது. இனி கோயில் தருமகர்த்தர்கள் வாளாவிருத்தலாகாது. யாவரும் சேர்ந்த ஒரு பெரிய மகாநாடு கூட்டி அயலவர் நம் ஆலயச் சொத்துக்களை யனுபவிக்காதபடி பார்த்துக்கொள்ளவேண்டும். கிறிஸ்தவர்கள் மாதிரியைப் பின்பற்றி குருக்கள்மாரைப் பயிற்றுதல், ஆங்கில பாடசாலைகள் வைத்துச் சனங்களுக்குச் சமயபோதனை செய்தல் முதலிய வற்ருல் சமயத்தைப் பாதுகாத்தல் வேண்டும்.

---

## உண்மைத் துறவிகள் ஒழிந்து போனுர்களோ!

சென்னைமா நகரமானது நம் தமிழ் நாட்டில் தலைநகரமாயிருந்தும், தமது ஒழுக்கத்தாலும் கல்வியாலும் சிறந்து சைவ சமயிகளுக்குத் தலைமை வகித்துச் சைவ சமய பரிபாலனம் செய்யும் துறவி ஒருவரையாவது காணுமல் தவிக்கின்றது. உண்மைத் துறவி ஒருவரேனும் நம் தமிழ் நாட்டில் இல்லையா? இருந்தால் இவர்களேன் இவ்விடம் வந்து சைவசமயத்தைப் பாதுகாத்தலாகாது. இவர்கள் தலைநகரத்தில் வந்து தங்கள் துறவையும் கல்வியையும் பயன்படுத்தாமல் மூலை முடுக்குகளில் பதுங்கியிருப்பதேன்?

